## தோஷக்குறியறிதல்.

பரவியவாதநாடி பக்கமேதுடிபாவண்ணம், பரவியபுழுப்போலூர்ந்து புலன்கெடவதிர்க்கேயோடில், சாமுறமேழுநாளிற் றோஷம்வந்தணுகிநாளை, யுரமுறப்பேசவொட்டாதுளறியேகுணமிழிற்கும். (௧௩)

## மேற்படிதோஷந்தீர மயிலினெய்,

பேச்சதுகுளறிநின்று பொருகவுள்மூச்சுமுணரம், ஆச்சுபன்னிரண்டுநாள்கா ணப்படிகிடக்கிற்பின்பு, கூச்சறமயிலினெய்யிற் குலவியவசமபுகட்டித், தேய்ச்சுமேலுள்ளுங்கொள்ளத் தோஷமுஞ் சிதைந்துபோமே. (௧௪)

## வாதமெலிவுதோஷம்,

வாதமேமெலிந்துவிம்மி வாண்டதுபுரண்டுதத்தி, தேசமாயாளை வால்போற்சிக்கியேதுடித்[illegible]யபெருகிமேலில் வந்திடு தோஷந்தானென், றோதினோர் முன்னோரிந்த வு[illegible]மையைக் கண்டு சொல்லே, (௧௫)

## சர்வாங்கவாதசன்னிக்குணம்.

கூரிட்டவாதநாடி கோழிபோற்கெண்டிநின்றால், வாரிட்டமுலைகல்லானே வாதமாஞசனனிபாகும், பேரிட்டதெடுத்தெடுத்துப் பிலப்படதியங்குமாகில், ஆரிட்டதேகதண்டாமதுசருவாங்கமாமே, ()

## மேற்படிநோய்தீரமருந்து.

பதறியவாதநாடி பாய்பரிபோலவோடிற், சிதறியமூன்று நாளில் சேர்ந்திடுங்குதிரைவாலி, மதறியாய்த்தொண்ணூற்றாறு நாழியில்மரிக்கிகாண்ட்டால, விதரியாமவேம்பினெண்ணெய் விஷமுஷ்டித்தயிலங்கூட்டே. (௧௭)

## வாதக்கதிப்பால்வரும்நோய்கள்.

வாதமேகதித்தபோது வாயுவுமெழும்புங்கண்டீர்,மாதமேகதித்தபோதுவகதிமிஞ்சனனிதோஷம்,வாதமேகதித்தபோது வந்திடும்வியாதிமேலும், வாதம்மேகதித்தம்போதுவல்லுடல்மெலிந்துகொல்லும். ()

## இருநாழிகையிலும்ஒருநாழிகையிலுஞ் சாகுந்குறி

மந்தமாய்வாதநாடி மயிருறும்பேன்போலோடில்,இந்ததாளிட்டிரண்டு நாழிகையிருப்புமில்லை, வதவணமுகமுநோக்கு மஞ்சணிறமெய்யாகில், முந்தவோர்நாழிகைக்குள் முடிவதுதிண்ணந்தானே.

## தனிவாயுநோயும்-வலிகுன்மமும்-மாரணமும்-வருங்குறி.

வாதந்தான்தனித்துநிற்கில் வாயுவுந்தனித்துநிற்கும்,வாதந்தானுதமிநிற்கில்வலிகுணமம்வந்துசேரும், வாதந்தானற்றுநிற்கில்மாரணமும வந்துசேரும, வாதத்தின்திரட்டதெல்லா மிவ்வகைவடிவுதானே (௨௰)

### கர்ப்பந்தரித்தநாடிகுணம்.

காரிகைதமக்குப்பிள்ளை கருப்பையைப்பற்றினின்றால், கூரியவாத
நாடி குண்டலப்புழுப்போலூரும், வீரியமூன்றுதிங்கள்விட்டில்போல்
பதைத்துநிற்கும், பாரியவெட்டாந்திங்கள் பையவேபுழுப்போலூரும்,

மாதர்கைபிடித்தபோது வந்திடும்வாதநாடி,தீதறவெடித்துப்பா
ய்ந்து சிதறியேசிறும்பினின்றால், பேதைதன்வயிற்றினுள்ளே பெருகு
சுரோணிதமேதங்கி வாதைகள்பண்ணிமாதவிடாய்காலம் வருத்தஞ்
செய்யும். (உஉ)

### கர்ப்பந்தரிக்கத்துடிம்பு,

இடுப்பொடுகடுத்துநொந்து இடைவிடாக்குத்துண்டாய்,கடுத்
திடாக்கர்ப்பந்தன்னைத் தங்கிடாவண்ணஞ்செய்யும், அடுத்ததோராவி
னெய்பி லானதோர்திருகுகள்ளி, கொடுத்திடாத்துமட்டிக்காயினகுழ
ம்பதுகொடுக்கநதங்கும், உங)

### சூதகத்தில்வாயுதங்கியகுணம்.

மாதர்கைபிடித்தபோது வந்திடுநாடிமூன்றும் சேதமாயிற்றுநின்
று சேரவேபதிந்துநிற்கில்; ஓதுமேசூதகத்தி லோங்கியவாய்வேநின்று
பேதமாம்வாதைபண்ணி பிணிகளைவிளைக்குந்தானே. (உச)

### எரிகுன்மவரலாறும் தீருமருந்தும்.

வாதமும்பித்தங்கூடி வன்பெலத்துடனேயோடில், தீதுவயிற்றி
னுள்ளே திரண்டதோர்பந்தம்பற்றி,வேதனையெரிப்புற்கூடி விரண்டி
டுமெரித்தகுன்மம், ஆதிசேர்சினிகூட்டி அஷ்டசூரணந்தான்கொள்ளே

### சூலைநோய்வரலாறு.

திருத்தமாய்வாதத்தோடே தீங்கொடுபித்தஞ்சேரிற்,பொருப்புக
ள்தோறுநொந்து போதவேபிடிக்குஞ்சூலை,பெருத்திடாவாயுகொள்ளு
ம் பெரியவயிறேபோகுவ, கருத்தினுலறிந்து நன்றாய் கண்டிடாய்மனி
தர்க்கெல்லாம். (உசு)

### காலனைபிடிக்குநாடி.

அரவின்றலைவைப்போல அடிக்கடிபுதறிவாதப்,உடம்பெறநின்று
பித்தம்ஓடிபேயொளிக்குமாகில், திரும்பிடாக்காலன்றனைதீங்குடன்
பிடித்தானென்று, வரம்பெறுமுனிவர்தாலும் வாகொடுசொன்னார்தே
ர்ந்தே. (உஎ)

### மூலாதாரவாதையால்காதலும்பயித்தியம்பிடித்துமறிக.

பிறந்திடும்பித்தநாடி பிரண்டுமேநிற்குமாகில்,வரண்டிடுமூலா
தார வாதையால்மடிவுசெய்யும், காண்டதுபித்தநாடிகதிப்பொடுதுடி
துமின்றால், அரண்டிடும்பயித்தியந்தான் அடைவொடுவேர்க்குமே,

### பேச்செழும்பலும் அடங்கலும் குளறலும் வருகை.

உற்றிடும்பித்தநாடி யொழுங்கொடுயெழும்பின்றால், வற்றிடாப்பேசுகின்ற வசனமுமெழும்பிற்கும், மத்தமப்பித்தநாடிமடங்கியே துடித்துநின்றால், உத்தமப்பேச்சுதானு மொடுங்கிவாய் குளறிப்போகும். (உ௯)

### பயித்தியநோய்வரலாறும் தீருமருந்தும்.

பித்தமாய்நாடிதானே பெலத்தோடுதனித்துநிற்கில், மத்திமபயித்தியத்தை வளர்ந்திடும்வாகுஞ்சேரும், உத்தமமூலை தன்னி லுருகியே குறைந்துநிற்கும், இற்றமுதநாடு மெண்ணெய் சிரசிற்றேய்த்தாறப்போமே. (௩௰)

### இறுகிறுப்புத்தீர்க்கஷாயம்

உதறியேபித்தநாடி உழுவைப்போற்றுடித்துநிற்கிற், பதறியேயுடம்பழுத்தும் பாய்ந்திடுஞ்சிறுநீர்வற்றும், மூதலியபுந்திமாறி கிறுகிறுத்துழலையுண்டாம, நிரவியபயறும்பச்சை நெல்லிக்காய்கஷாயங்கூட்டே. (௩௧)

### சுரத்தோடுகபாலக்குத்துவரலாறுந் தீருமவகையும்

நடுவிரல்பித்தமற்று மந்தமாய்நடக்குமாகில், வடிவளவுடம்பழுத்திமந்தித்துச்சுரமுந்தோன்றி, இடிபிடித்ததுபோலோடிச்சிரசினிலிடித்துக்குத்தும, படியவேசாதிலிங்கப் புகையுண்ணப்பறந்துபோமே. ()

### வரகுவிசுரம் பிரமேகம்வரலாறு.

வளர்ந்திடும்பித்தநாடி வலமிடம்பிசகாவண்ணம், பிளந்ததுதனித்துப்பச்சை புழுநடங்கதுபோலோடில், உளந்தனிலவரகுவிதங்கி யுடம்புலர்ந்தஸ்திதனனில, வளர்ந்திடுஞ்சுரங்கள்வந்துவளர்பிரமேகமாமே.

### மஞ்சள்நிறநீர்க்கடுப்புடலுவாட்சிதீரவங்கபற்பம்.

சலநிறமஞ்சளைபோலாய்க் கடுத்திடுந்தளர்ச்சிசெய்யும, உலவியமூன்றுமாதம்பழகிற்பின்னுடம்புதனனிற், குலவியவங்கபற்பங்கொடுக்காமற்போவாராகில், விலகிடாசகூலைவந்து வெடித்துப்புண்ணாகுமென்னே. (௩௪)

### பித்தத்தாலுண்டாகுநோய்கள்வருதலறிக.

பித்தமேதனித்தாற்சூடு பெலத்துடனுலரச்செய்யும், பித்தமேமிகுந்தாலிந்த யிருமலுமபெலத்துநிற்கும், பித்தமேமிகுந்ததானாற் பெலன்குறைந்துடம்பழுத்தும், பித்தமேதிரட்டிநாலிற் பேசினாற்பெரியோர்தாமே. (௩௫)

### பெருவாதம் உதரவாயுபயித்தியமுதலான
### பிணிகளுற்பவித்தல்.

பித்தமேகெதித்தபோது பெருத்திடும்வாதமுண்டாம், பித்தமேகெதித்தபோது பெருத்திடும்வயிற்றிலவாயு, பித்தமேகெதித்தபோதுபெருத்திடும்பித்தேசனு, பித்தமேகெதித்தபோது பிறந்திடும்பிணியனேகம்

### ஓர்பகலுக்குளிறக்குப்நாடிக்குறி.

மத்திபஜயநாடி மந்தித்துவுமன்றின்று, முத்தியயிசல்போலமு
டிகியேபதறுமாகில், நித்தத்தோர்பகலுக்குள்ளே நில்லாதுமரணம்வர்
து கத்தியேமரிப்பாரென்றேசொல்லுவார்நல்மேலோர்தாமே. (௪௪)

### குத்தங்கோளைமுவாயுமரணநிச்சயக்குறி

சிலேட்டுமநாடி தானே தெளிவொடுமிற்கிற்றீதாம், சிலேட்டுமமத்
தம்பற்றில் சேர்ந்திடுங்கோழைவாயு, சிலேட்டுமமிருந்தாகின்றால் செ
ப்பிடுமரணத்திண்ணம், சிலேட்டுமத்திரட்டதெல்லாந் தெளிவொடு க
ண்டுகொள்ளே. (௪௫)

### சாகுங்குறியறிதல்.

ஐயந்தான் பித்தந்தன்னை யணைந்தெதிர்த்தேறுமாகில், கையவோ
ர்நாளிற்காலன் நாடியேவருவதுண்மை, பையவேஐயம்பாய்ந்து வாத
த்தைப்பற்றிநின்றால், செய்யும்வாறெண்ணசாவோரா நாழிகைதிண்ணந்
தானே. (௪௬)

### வியாதிதோஷம்ஐயசன்னிமரணங்கள்வருகை

ஐயமேகநிக்கபோது அணுகியேவியாதியுண்டாம், ஐயமேகநித்
தபோது அறிந்திடுந்தோஷமாகும், ஐயமேகநித்தபோது ஐயமாஞ்ச
ன்னியாகும், ஐயமேகநித்தபோதவ்வையமேமெலிந்துகொல்லும் ()

### சரீரக்குக்கலும் நெஞ்சுநோக்காடுமாய்க்காணுமேகமறிக.

பார்க்கிடுநாடிமூன்றும் பதிந்து நமலிந்துநிற்கில், கோத்திடுமேக
முள்ளே கோணலியேபொருந்திமெய்யில், அத்திடாக்குத்தலுண்டாய
தனொடுநெஞ்சம்நோகும், சேத்தாரயிக்குணங்கள் தெளிவேயறிந்
திடாயே. (௪௮)

### பிணிவாராமையும் வருகையுமறிக

வாதபித்தைபமூன்றும்வண்பலத்துடனேகத்தம், பேதமொன்றி
ல்லாவண்ணம் பேசியதானந்தன்னில், நீதியாய்நிலைத்துநின்றால் நெடும்
பிணிசிக்கலில்லை, தாதுவுமொன்றோடொன்று தாவிடிற்பிணிகள் தா
னே. (௪௯)

### கழல்வாதம்-மூலப்-சாவு-வாழ்வுவருகை

மூவரும்உறத்துநின்றால் மூண்டிடுங்கழல்வாதங்கள், மூவருமர்
தமானால் மூளைத்திடுமூலமெல்லாம், மூவரும்பதங்கிநின்றால்முடிவது
திண்ணங்கண்டாய், மூவருந்தன்தன்காலந் தறித்திடில்வாழலாமே.

### ஆறுமாதத்தில்-சாகுங்குறியறிதல்.

காலையில்மூன்றுநாடிக் திப்பொடுகெடக்குமாகில், வாலைபா மூச்சு

லம் வன்பித்தமழுந்துமாகில், மாலையிவ்வாதந்தானுமையத்தினுறையு
மாகில், நீலகண்டத்தாரணை நிலைச்சாவுமாதமாறே (௫௧)

### மலசலவடைப்பும் விடுப்பும்வருதலறிக.

பெருவிரலின்பக்கம் நாடிதான்பிசகியோடில், மருவியமலசலங்கள் மந்தித்தேயடைத்துக்கொள்ளும்,பெருகவேயடிவயிற்றிற்பிடித்து மேலெழுப்புமாகில், தனியிலைமலசலங்கள்தானதுகழன்றுபோமே.

### தொப்புளில்-மலம்-ஜலம்-வாயு-இடதுசந்து இடதுமுதுகுஇறுத்தலறிக.

நடுவிரல்வலதுபக்கம்நாடிதானடக்கும்போது,மடையதாமுந்திதன்னில்மலம்சலம்வாயுசேரும்,வடநிலைமூலையின்மாதேவாகொடியிடது சந்து, இடமுதுகழுத்திற்நிற்பதென்பதுமுன்சொன்னோமே. (௫௩)

### தொப்புளின்கீழையமும்பித்தமுஞ்சேருந்தானமறிக

நடுவிரலிடதுபக்கம் நாடிதானடக்கும்போது, அடைவொடுவுந்தியின்கீழையோடுபித்தஞ்சேரும், நடகரியுரித்தோன்றன்னைக் கருத்தினிலிருத்திக்கொண்டு, வடிவுறநாடிபார்த்துவந்தநோயறிந்துசொல்லே

### கால்-கை-வலிப்பும்-உடல்நோக்காடுமாய்வருஞ் சூலைநோய்க்குறி.

சிறுவிரலிரண்டுபக்கம் நாடிதான்சிதறியோடில், மருவியகாலுங் கையும் வலித்துடல்நோவேநோகும், ஒருபொருளாகிநின்ற வுமையொருபாகமனைவந்த, திருசடைசிவனைநோக்கிச் செப்பினேன்சூலையாமே.

### சூலைநோய்-கசத்தவாய்நீர்-மயக்கம்வாந்தி அடிவயிற்றுச்சூலைவருகை

மோதிரவிரலிடத்தே முடுகியோடியோடில், காதியுஞ்சூலைநோயுண்டாம் கைத்திடும்வாய்நீருறும், ஆதியானருளினாலேமயக்கமும்வாந்தியுண்டாம், ஆதியேயடிவயிற்றில்சூலையுமமர்ந்திருக்கும். (௫௬)

### கால்-கை-கடுப்பு-சோபம்-உந்திநோய்-தலைவலிவருகையும் சிகிச்சையுமறிதல்.

மோதிரவிரல்வலத்தே முடுகியோடியோடில், கால்களுங்கைகளும்மொன்கடுத்துப்பின்சோபமாகி ஓதியேயுந்திநொந்து வுறுதியாய்த் தலைவலிக்கில் ஆதியானருளினாலேபவர்கட்குநயம்பண்ணே. (௫௭)

### ௨-நாளிலும்-௮-நாளிலுஞ்சாகுங்குறி

வெள்ளநீரோடும்போலசிலேட்டுமமீறியோடில்,வள்ளல்தானறியச்சொன்னோமிப்பதுமற்றுநாளில், தெள்ளியவாதந்தானுஞ் சிதறியே போடுமாகில், உள்ளியநாளோரெட்டி லுறுதியாய்ச்சாவாரென்னே ()

௩-நாள்-௫-நாள்-௭-நாளிற்சாகுங்குறி.

பித்தமிப்படியேயோடிற் பிதற்றிநாள்மூன்றிற்கொல்லும்,மூத்தி யவாதபித்த முயல்வெப்படியேயோடில், பற்றறச்சொன்னோங்கண்டீர் பதினைந்துநாளிற்கொல்லும், நற்றியஐயங்கூடில்நாற்பதுநாளிற்சொல் லும். ௫௯

உடனேயும்-௩-மாதத்திலுஞ்சாகும்நாடிக்குறி.

அரணைவாற்றுடிபோலோடி லாங்கவன்பிழைப்பதில்லை; பாவுமேத ட்கொடுக்குப்போலும் பதைத்திடிற்சாவுதிண்ணம், கரைபெறும்பது போலோடிற் கண்டிடாய்திங்கள்மூன்றில்- வரையணிமூலைநல்மாதேம ரணமென்றறிந்துகொள்ளே. ௬௰

மரணநாடிக்குறியறிதல்.

ஐயமாஞ்சிலேட்டுமத்தி லாடியநாடிதானும். தொய்யவே நவிலை போலத்தொடங்கியேகுதித்திட்டாலும்-பையவேபுரண்டுபுத்துப் பாம் பெனநடைகண்டாலும்-மைசெறிகுழலினாளேமரணமென்றறிந்துகொ ள்ளே. (௬௧)

ஒருமாதத்திற்சாகும்நாடிக்குறி.

தேளெனத்தெறித்துச்சற்றே திரிநாடிசெலுமாகில்-மாளவேம ரணவாதை வந்திடுஞ்சன்னியுண்டாம்- மீளுவதில்லைமூன்றுள்விதிப்ப டிவந்ததிது-நாளறிதிங்கட்குள்ளே நாசமாய்க்கொல்லுந்தானே.(௬௨)

இரண்டரைநாளிலும்-எட்டுநாளிலுஞ்சாகும் ஐயநாடிக்குறி.

புரண்டதுஉருண்டுமேலே பொருந்தியேநடக்குமாகில். இரண்ட ரைநாளினிற்று னியல்பதாமரணமென்க- சுருண்டமென்குழலினாளே சொல்லுநாளெட்டினிற்றன்-மரணமே வருகுமென்றுகாகொடு வழங் குவாயே. (௬௩)

மரணநாடிக்குறியறிதல்.

கண்டவிற்றுடிப்புமூண்டு கடிபமூவிரலையூன்றில் - விண்டையும் வாதம்பித்தம் மேவியநாடிமூன்றும்-ஒண்டொடிமாதேகேளா யுயர்ந்த தோர்தோற்றமாகி-மண்டியேயெழுந்துபாயில் மரணமென்றறிந்துகொ ள்ளே. (௬௪)

ஒருமாதத்திற்சாகும்நாடிக்குறியறிதல்.

எற்றியதீபந்தன்னி லெரிசுடர்த்தீயைப்போல- போற்றியநாடிதா னும் பொலிவுறத்தோன்றுமாகில்-மாற்றரும்வாழ்வுநாளு மாளுமோர் மாதத்தென்று-நாற்றிசையுள்ளோர்க்கெல்லாம்நாடிநீகபத்துசொல்லே.

பிராணன்விடும்நாடிக்குறியறிதல்

கிளைபுரவட்டம்பூண்டுசின்றிடுமாணைவால்போற்- குறைபடப்பி த்தமொன்றுங்குறைந்துமேகிற்குமாகில்- உறைவிடும்பிராணனென்று வுண்மைசொல்வாகடத்திற்- பறைபதுகட்டிச்சாற்றும் பண்டிதர்க்கெ ல்லாம்பாரே. (௬௫)

ரோயின்சாரம்-முற்றிற்று.

உ

கடவுள் துணை.

அகஸ்தியமுனிவர் அருளிச்செய்த

# அவிழ்தசாரம்.

கணபதிதுதி.

விருத்தம்.

ஆதியாங்கணேசன்காப்பு அரனூற்றுக்கருவையெல்லாஞ்
சோதியாம்ஆயிபாதந் துணையெனவுட்கொண்டேத்தி
நீதியாந்திரட்டுச்சூத்திரம் நிலைத்தவாகடமாய்ச்சொல்ல
வாதமாம்பிணிகடீரு மருந்தொடுகுணத்தைக்கேளே. (க)

வாதம்-எண்பதுந்தீரச்சூரணம்.

வாதந்தானெண்பதாகும் வருகின்றபக்கவாதம்
சீதமெய்நடுக்குவாதஞ் சிறந்திடுமுடக்குவாதம்
சூதகமாய்சந்துவாதந் தோன்றியமுகத்தின்வாதம்
பேதமாம்வாதந்தீரப் பெருத்திடுமருந்துகேளே. (உ)

மருந்துதான்சித்திரமூலம் வளருமாவிலிங்குகொன்றை
திருந்தியமுருக்கைசங்கு சிறந்தவெள்ளறுகேவேம்பு
பொருந்தியபெருக்குசுக்கி புகழ்ந்திப்பிலிமரீசங்
சருந்தியலவணமஞ்சன் கால்மண்டலந்தான்கொள்ளே. (௩)

மேலுக்குத் தொக்கிடமிடுந்தயிலம்.

கொள்ளவேவெண்ணெபஞ்சுங் குலவுநில்லைப்பாற்கற்றும்
விள்ளவேமுருங்கைவாதை மிருத்தமாவிலிங்கைமூலங்
கள்ளவிழ்காயமிந்து கடியதிப்பிலிவசம்பு
உள்ளமாபெரித்தைபின்னை புடம்புதொக்கட்டுஞ்செய்யே. (௪)

பித்தநாற்பதுந் தீரச்சூரணம்.

செய்யதோரெண்ணஞ்சாகச் சிறந்திடும்பித்தங்கேளாய்
அய்யமாஞ்சித்தப்பிரமை மறிவிலாப்பிரமைசுற்றும்
மையவேகபெக்கல்வாந்தி கலத்திடுசுழற்றல்வாய்நீர்
தையலேயிவைகளுக்குச் சாற்றிடமருந்துகேளே. (௫)

## சூரணஞ்செய்யுந்திறங்கள்.

சாற்றியமதுரங்கோஷ்டந் தனருமஞ்சிட்டிபேலம்—போற்றியநெல்லிமாஞ்சில் புகழுஞ்சந்தனமிராம்பு- மாற்றியதாளிசந்தான் மருவுசீரகமும்நாகம்-பாற்றுசர்க்கரையுங்கூட்டிப் பரிந்துமண்டலந்தான்கொள்ளே. (௬)

## பித்தநாற்பதுந்தீர மூழ்நுர்த்தைலம்.

பரிந்துநல்லெண்ணெய்பாலும் பருத்திடுநெல்லிச்சாறுந்-திருந்தியமுசுமுசுக்கை சிந்திலு(பான்னுங்காணி- வருந்தியமுத்தஞ்சிட்டிமதாமோதேடைமாஞ்சில்- பொருந்துசண்பகப்பூவிராம்பு புனைந்தெரித்தலைக்குவாரே. (௭)

## சிலேட்டுமம் இருபதுந்தீரநெய்.

வார்பெறுதனத்தாய்ஐயம்வளர்ந்திடுமிருபதாகப் பேர்பெறுசுவாசகாசம் பெருமிருமலுமிர்த்தம்- சீர்பெறுகாசமாந்தை திகைத்திடுசெயரோகங்கள்- தார்பெறுசூரமுண்டாகுந் தனக்கெலாமருந்து கேளே.

## நெய்செய்யுந்திறங்கள்.

தனதுநல்விஞ்சிச்சாறு தருதிரிகடுகோடேலப்-மனமுறுதேக்குசிங்கி வாலுழுவரிசிபிந்து-கனமுறுநாகங்கண்டங் கத்திரியாத்தையோடு நிலையுறுசீரமிரத்தம் நெய்யெரித்துள்ளேகொள்ளே. (௯)

எரித்தநல்லெண்ணெய்பாலும் இருவேலிவிலாமிச்சோடு-தரித்திடுசீந்தில்முத்தஞ் சந்தனந்தேவதாரம்-உரித்திடுதண்ணீர் விட்டாறுபர்நிலப்பனைகன்னூரி- பருத்தமஞ்சனமஞ்சோடு பகர்தலைநனக்குவாரே.

## மூலநோயாறுந்தீரச்சூரணம்

தனக்குறுமிரத்தமூலந் தாங்குறுமூலஞ்சீழ்மூலம்-மனக்குறுவாதபித்தம்-வளையமூலத்தோடு, சினக்குறுமூனைபாமூலஞ்சிமலக்குறித்தமெல்லாங்- கனக்குறுமருந்துசொல்ல கன்னியேகேட்டிடாயே. (௰௧)

கன்னியின்சருகுமுத்தங் கருணையும்பெருத்தசுக்கும்- வன்னியாஞ்சித்திரமூலமருட்கிழங்கொடுகடுக்காய் — பன்னியபிரண்டகொன்றைப்பகாபுளிகறங்காட்டிற்- றன்னியசனைபாகிற் சூரணஞ்செய்துகொள்வீரே. (௰௨)

## கிராணிதீரமருந்து.

செய்திடும்வாதபித்தசிலேட்டுமக்கிராணிமூலம்- சொய்திடுகிராணி
வாயுகூடியபிரத்தபித்தம்- செய்திடுசலக்கிராணி நிலைத்திடுசீகிராணி-எ
ய்திடுகிராணிக்கெல்லா மினியநல்மருந்துகேளே. (௰௩)

இனியசீரகப்புகாய மிந்துக்கலவையதுப்பு- கனியவென்ணுள்ளி
சுக்கு கடியதிப்பிலிமரீசக்- தனியதுசவுட்டு மண்ணுகதழற்சித்ர மூல
மோமம், பனியதுபிரமிச்சாற்றால்பண்ணியமருந்துகொள்ளே. (௰௪)

## குன்மமெட்டுந்தீரச் சூரணம்.

பண்ணியவாதபித்தம் பகரையக்குன்மமெல்லாம்- நன்னியசந்தி
குன்மம் நலந்திடுவாய்நீர்க்குன்மங்-கண்ணியபெரியாங்குன்மங்கனத்
திடும்பிரட்டுக்குன்மங்குண்ணியகுன்மந்தீரக்கூறக்கேள்மருந்துதானே

கூறியநாவிருதங் கொடியவெண்காரந்தாரந்; தேறியபிருவிலங்க
ந்திகழ்மஞ்சுசிலையுங்காரங், காறியகெந்தகந்தான் களர்திரிகடுகூட்டி
ஆறியபொடியதாக்கி யதிற்றேன்விட்டருந்துவாயே. (௰௬)

அருந்திடவாதபித்தம்ஐயமோடிற்சத்திதான் - வருந்தும்வாதத்
தில்காதும்வளர்சலபித்ததாறும்- பொருந்துமஐயத்திற்பத்தும் போகு
மேயிவைகளெல்லாம்- திருந்தியவாதபித்த சிலேட்டமுந்தீரலாமே. ()

## தலைமூழ்குந்தைலம்.

ஆகமருந்துகேளேயலைகடல்முத்தங்கோஷ்டம்- தாமதுயிலங்கை
க்கொட்டை தூங்கைதயுந்தருப்பூலாவும், போமிதுகொன்றையோடுபுக
ளிப்பாதிரியுங்காவல்-ஓமதுகாச்சசற்காய்ந்தவுபர்மதாமூர் தான்றியே.

மதாஞ்சந்தனங்கிராம்பு மகிழ்பச்சைக்கற்பூவுங்- சதிர்பெறுமி
லவங்கந்தான் தாளிசமாஞ்சில்பூரங்- கதிரிலாமிச்சஞ்சிந்தில் கனமுத்த
ம்வேலிசேடம்- எதிரிலாவெண்ணெய்பானு மெரித்துநீ மூழ்கிடாயே.

## மேகம்-இருபதுந்தீராசாயனம்.

எரித்திடும்பிரத்தமேக மிசைக்கதசீமேகந்தண்டில்- மரித்திடுமேகபு
ன்னும் வருத்தியகிரிச்சம்பானை- தரித்திடுது ஸ்ரீமேகஞ்சலக்கட்டுமே
கந்தக்கா- விரித்திடுமேகந்தீர விளம்பக்கேள்மருந்துதானே. (உ௰)

விளங்கியபறங்கிப்பட்டை மேரிகெந்தகஞ்சாதிக்காய்,வளம்புறமி
ராம்புநாகம் கற்பூரஞ்சாதிப்பத்திரி, தளம்புறுமசுவகெந்தி தளர்கொ
டுவேலிமாஞ்சி, இளம்புசர்க்கரைசெய்சூட்டியிதமுட னுட்கொள்வாயே

காமாலைதீரப்பொடி.

இதமுறுவாதபித்த மிசைந்தசிலேட்டுமன்காமாலை, பதமுறுமழு
ற்காமாலை பாண்டுவீங்கியகாமாலை நிதமுறுவாட்காமாலை நிறமஞ்சள்நீ
ர்க்காமாலை, சிதமுலைவிற்பரங்கள் சேர்ந்தகாமாலைதானே. (௨௨)

சேர்ந்தகாமாலைக்கெல்லாங் கிரந்தாப்பொடியுங்கிட்டஞ்,சார்ந்திடு
ங்கடுக்காய்நெல்லி தான்றிசீரகமிரண்டும், போர்த்தவெள்ளுள்ளிகாந்த
ம் புகழ்பெறுகாயஞ்சுக்கு சார்ந்ததிப்பிலிமரீசந்தான்பதம் பழச்சாற்
றிலே. (௨௩)

சொறிசிரங்குதீர உள்ளுக்கிரதம்.

பதமுறுகுலைபுண்கள் பகர்ந்திடுங்கடிவிசாரம்,இசமுறுபெருவியா
தி யிசைந்திடுகுட்டரோகம், சதமுறுதேமல்மேனிதளர்ந்தாமரைகை
வெள்ளை, நிதமுறிசொறிசிரங்கு நிகழ்ந்திடுமருந்துகேளே. (௨௪)

மேலுக்குச் சாம்பிராணி தயிலம்பூசல்.

நிகழ்ந்துநீரொட்டிவித்து வேர்படுஞ்சூகம்லிங்கம், தகர்ந்தநெல்லிக்
காய்கெந்தி தாரமுந்துருசுதுக்கம், புகர்தநெய்வார்த்தரைத்துப்பொ
ருந்தநாற்பதுநாட்கொள்ள; தகர்ந்திடுஞ்சாம்பிராணித் தயிலஞ் செய்
துடம்பிற்பூசே. (௨௫)

கண்டத்துக்குமேற்பட்டசகலரோகமுந்தீரச்சூரணம்;

பூசிடபாசகுலை டொறுத்தபின்னிகரீர்த்தும்மல், நாசிக பீடரோ
கம் நாற்றமுந்தினனுங்குஷ்டம், தேசிகங்காதிற்சீழுஞ் சோகதிடுங்க
பாலவாயு,காசினிதந்தரோகங் காத்திடமருந்துகேளே. ௨௬)

காத்திடும்பெருமருந்துகண்டங்கத்திரியுஞ்சுக்குஞ் சார்த்திடுஞ்சே
ங்கத்தாரி தோன்றுசீரகமிரண்டும், பார்த்திடுகடுரோணிபகர்சங்கம்அ
ரத்தையோடு—நிரந்தாஞ்சூர்ணத்தின்ன நீங்குமேல்நோய்கள்தானே.

தலைமுழுந்தயிலம்.

நீங்குகார்த்திகைக்கிழங்குநிலக்குமிழ்தசமூலந்தான்பாங்குறமஞ்
சள்மூன்று பகர்குப்பிக்கடுரோணி-தேங்குசாரடைசெழுக்கு செங்
கொடுவேலிசீந்தில்-பாங்குநல்லெண்ணெய்செய்து பருவமாய் வார்ச்
செய்வாயே. (௨௮)

கவிசைபெருவயிறு மகோதரந்தீர.

பருவமாங்கவிசையோடு பக்கவிப்புருதிசால,உருவமாய்பீலிகோ
வை யுதரத்திஞ்சூலையண்டி-கருவதை யருக்குங்கர்ப்பக் கடிவலிப்புரு
தியோடு-பெருவயிறுடனேமற்றப் பெருமகோதரமுந்தீரே. (௨௯)

யில்லிற்கில் கைகம்போற்றேமாங் கண்டுகொள்ளு- அடிமுதலைபிரசி
கின்றகாலைத்தொட்டு அசிசித்தோடிருபத்தெட்டாய்த்துகொள்ளே.

### இரத்தமேகத்திரத் தாளிசபத்திரிச்சூரணம்.

கொள்ளநேலகாளிசங்கழஞ்சதாறுகூட்டுதிரிகடுகுகழஞ்சிரண்டு
அள்ளவேயேலமி லவங்கந்தாறும அப்பனேவகை கழஞ்சதைந்து-அ
ன்ளவேபிடித்துவடி கொண்டபின் பு அக்குகழஞ்சிராறு சீனிகூட்டி-
யுள்ளன்பாய்த்தினறுவசில் வாகுபிதநம் ஓடுசலக்கமேப் பிரத்தமேகம
போமே. (ருரு)

### வேதைலிங்கக்கட்டு.

மேகப்போம்சகலரோய்வாய்வுந்தீரும்நேவடிக்கைசிமிட்டுவித்தை
வாதங்கேளு- பாகம்போமென்றுநேகெந்திதாரம் பகருமரப்பொடி
யோடுசிலையுங்கூட்டித்-தாகம்போகருவிட்டு அரைத்துவாங்கிச் சமனு
லிங்கத்திற்கவசங்கட்டி-ஆகம்போமென்றுதேருக்கு-த்தில் அப்ப
னேசாதிலிங்கமஅடைகட்டாமே. (ருசு)

### கட்டியலிங்கம் வேதையாட.

கட்டானலிங்கங்காட்டு]முன்னோர்களை-மட்டானதன்பதிவைத்தி
டும்வேதைகேள்-விட்டானகூடனும்விரமுங்கூட்டிடு- தட்டானதில்லை
தங்கம்போலாடுமே, (ருஎ)

ஆடவேகெந்திபதினஞ்சிச்சாறு-கூடவேவிட்டுக்குழைய அரைத்
திடு-வாடவேசாமம்வளர்த்தவெயில்முகம்-நாடவேயப்படிகான மூன்
றுபாருமே. (ருஅ)

பாருநீகெக்கம்பற்பமதாக- சேருதிலிங்கமுஞ்செயமானகெந்தி
யும்-வாருநீர்பிங்காணில்வளர்குமரிச்சாறும்-ஏறநீகோழிரத்தமும் கூ
ட்டிடே, (ருகூ)

கூட்டியதனிற்குழம்புஅப்பிரகத்தை-இட்டுரவிமுகந்தின மூன்று
லர்ந்தபின-காட்டிவராகம் நல்ல புடத்திலே-வாட்டியெடுக்கமாசற்றப
ற்பமே (சுய)

பற்பமினிக்கேள்பாந்திடு ரோயெல்லாம்-அற்பமீதென்று அசட
ரேயென்றுநீர்-கற்பமீதாகுங்கர்மவினையறும்-தட்பமதெல்லாம்நக
ர்ந்தனன்முற்றே- (சுக)

அகஸ்தியமுனிவர் - அருளிச்செய்த

அமிழ்தசாரம்-முற்றிற்று.

---

உ

கடவுள் துணை.

தேரையர் அருளிச்செய்த

# நோயின்சாரம் ௱.

## கணபதி துதி.

வெண்பா.

அரியமெய்வாகடத்தி னுட்பொருளையாராய்ந்து
தெரியதானுஞ்செந்தமிழிற் செப்பவே-மாரியென
வெள்ளமதம்பொழியும் பவழமுகமுடைய
வள்ளலையென்மனது வா. (௧)

### அரத்தையை நாவிலிட இருமல் ஆக்கிராணிக்க பீனிசம்சளிதீரும்.

வாவெனவேசிலேட்டுமத்தாலவர்க்கிருமல்களும்- போவெனவே நாவிலிடிற்போகுமே-பாவனையாய் வாக்கானபீனிசமும்மகத்தாஞ்சளியும்போம்- ஆக்கிராணஞ்செய்யிலரத்தை. (௨)

### வாதச்சுரந்தீரக் கியாழம்.

அரத்தை சதகுப்பைசுக்கானகொச்சிச்சாற்றில்- அரைத்திழையக் காச்சிப்பருகத-வருத்தத-தலைவலிகள்நீரேற்றந் தன்னுடனேவாதசுரங் குலைகுலைந்துபோகுமெனக்கூறு. (௩)

### பித்தசுரந்தீரக்கியாழம்.

கூறுமின்றுபாவட்டைகொண்டசித்தாமுட்டி-வீரோமம்வேலிப்பருத்திவேர்-காறுமிஞ்சி - நன்மிளகுங்கூட்டிகலமாய்க்கியாழமுண்ண-சென்மபித்தச்சுரம்போஞ்செப்பு. (௪)

### சிலேட்டுமசுரந்தீரக்கியாழம்.

செப்புமின்றதிப்பிலியுஞ்சோடாதோடைசிக்கும்-ஒப்பரியசிற்றரத்தைதயோமமுடனே-தப்பில்லாக், கண்ட கத்திரிதேனுங்காய்ச்சிக்குடித்திடவே-தெண்டசிலேட்மச்சுரம்போம்செப்பு. (௫)

### சத்தி எரிவாதந்தீரப்பூசல்.

செப்பரிய பேரிலக்கைசிறந்தபுளியாரையரைத்-தொப்பரியகாடியுடன்கரைத்துத்-தப்பாமல், மத்திட்டுத்தான்கடைந்துவந்தருரைபூசுவிக்கச்-சத்திரெரிவாதமில்லைத்தான். (௬)

## அஷ்டகுன்மத்திற்சூரணம்.

—அதிமதுரமண்டூரஞ்சுத்திபொடிசேவருக்கிச்சாம்பல்மிளகுபொடிசமனும்-தேம்பிடவே-எட்டிலொன்றாகவே மிட்டிணக்கி யோர்கழஞ்சு அட்டகுன்மம்போமேயறிந்து, (௧௬)

## அண்டவாதத்திற்பொடி.

அலைபுங்கநுவனைபலார்க்கப்பொடிசெய்து கிலையுமிளகுபொடிநேர்சரியாய்-மலையில்-பெருங்காயங்கூட்டியுண்ணப் போமண்டவாதம்-வரும்பானைபோல்வீக்கம்வாடும். (௧௭)

## எரிகுன்மத்திற்கியாழம்,

வாடுகின்றபிக்குசக்குவாரிக்கியாழமதில்-தேடுகின்றகாயத்திப்பிலிசேர்த்து-நாடுபுகழ்-செப்புக்காதநீர்செலுத்தீர்செலுத்தியபினவெப்பெரிகுன்மம்போம்விரைந்து. (௧௮)

## அசீர்ணம்-சகலதோஷம்-சூலை-சுரம்-கிரிமிதீர.

விளாந்துமிளகரைத்து வெந்நீரினிற்கரைத்து அருந்தசீரணங்களாறும்-வருந்துணு—சகலதோஷஞ்சூலைசகலசுரமுங்கிருமி-பெலனோடிப்போதுமாம்பேறு. (௧௯)

## சுவாசகாசத்திற்கியாழம்.

பெருவிர்பிராய்சூரை பேரிசங்குகூட்டி மாறுநீர்விட்டாவிவாங்கிக்கூறியதில்-திப்பிலியுமவெங்காரந்தேன்விட்டுமென்பொடியாய் ஒப்புசுவாசக்காசமோடும். (௨௦)

## வாயுகரப்பன் விக்கற்கிற்குடிநீர்.

ஓடுகின்றசாரணையும்உப்புமரிதகியும்-வாடுகின்றசுக்கும்வசைகுவிநீர்தேடி-மறுகமறுகக்குடிக்கவாயுகரப்பன்வன்மை-பறுபறுகெனக்கழியும்பார். (௨௧)

## மேகம் உட்காச்சல் பிரமியகற்ற,

• பாரீரேமேகம்வந்தால்பண்புடேயம்பழத்தில்—சேரீரேசர்க்கரைஞ்சீரகமும்-நாரீரே-புண்டாக்காற்போகாதோவுட்காச்சல் பிரமியமுங்கண்டாக்காற்போகாதேகாண், (௨௨)

## கனை இருமல்-காசத்திற்பிட்டவிநீர்,

காணீராடாதோடைகண்டங்கத்திரிதுளசி- துணிர் பிட்டவிநீரிற்றிப்பிலித்தூள-பேணிபிடில்-கொக்குக் கொக்கெனவிருமுங்கொடுங்குயிலைபது-டெக்குப்போக்கென்றோடிப்போம். (௨௩)

## இரத்தபித்தத்திற்குடிநீர்,

பொதிரேதோடையிலைபோக்கதெரூருமுத்திரிகை— சேதிரேசற்குடிநீர்செய்திலாய்-மாதிரே- அக்காரங்கூட்டிபருந்திரருந்தியபின்—உக்காரரத்தபித்தமே, (௨௪)

### ஐயம்இருபதர்நீரச்சூரணம்.

ஓடுகின்றதாளிசப் பத்திரியி மோர்மிளகும் - தேடுகின்றநாகப்பூ திப்பிலியுங்-கூடயில், கூகைநீரேல் பிநிலவங்கந்தான்கூட்டி, பாகமாய்ச்சூரணமும்பண். (௨௫)

பண்ணியபின்னக்காரம்பாகமதாய்க்கூட்டி, யுண்ணக்கழுஞ்சதே னுள்ளிவிட்டே-யென்னவே-நாளுனுபானத்தில் நாவிற்பருகிடப்போ னுல்நாலையமேபோம். (௨௬)

### இருமலுப்பிசத்திரச் சூரணம்.

போமேகடுகெல்லிபோற்றரியதான்றிசிங்கி - தாமே கற்கோஷ்டஞ்சடாமாஞ்சில் - ஆமே, திரிகடுகித்திபபுசிறுதேக்குசண்டும், திருகிடவேசூரணமாய்ச்செய். (௨௭)

### செய்தமருந்துதின்னுமனுபானம்.

செய்தமருந்து சேனுத்தவிரும்பிக்கேள் -பெய்தபிஞ்சிச்சாறுந்தே னிட்டுண்ண-ஐய ரறக், குத்திகருத்திற்றிருமுங் கூட்டுப்பிசச்சுவாசக்-கத்திதத்திற்றேடுந்தான். (௨௮)

தானேபடம்புவிரைதப்பாமலேர்கழுஞ்சு - மானேமறநீரால்வாங்கியுண்ண-நானேசொல், எழுஞாயிறுகிரந்தி ஈளையெலிகட்டியும், விழுமாறுசொனனேன்கேள்வேண்டு. (௨௯)

### ஈளை-பஞ்சகாசம் விக்கல்தீரஎண்ணெய்.

வேண்டுபெருங்காயம் வெலியிலைச்சாறும்-ஆண்டுசென்றஆமணக்கெண்ணெய்க்கூட்டி - பாண்டமதில், இட்டேவடித்துண்ணஈளைபஞ்சகாசம் விக்கல்-விட்டேகிப்போகும்வெருண்டு. (௩௰)

### பஞ்சசுவாசகாசந்திரப்பொடி.

வெருண்டமிளகோர்மூன்று விரையழிஞ்சிலெட்டு-திரண்டபொடிகழுஞ்சுதேனிற்கொள்-மருண்டிதனில், பட்டேன் பட்டேனென்னும் பஞ்சசுவாசக்காசம்-கெட்டேன்கெட்டேனென்னுங்கேள். (௩௧)

### சிலேட்டுமத்தால்வந்தநோய்தீர எண்ணெய்.

கேளுக்கையாந்தகரைச் சாறுங்கிளர்கடுக்காய் - மீளுகல்லெண்ணெயுடனெவக்திறக்கி- நாளுமெட்டுத், தின்னத்தினங்கழுஞ்சு சிலேட்டுமத்தால்வந்தபிணி- சொன்னபோதேயோடுந்தான். (௩௨)

### ஈளை இருமல் சுவாசகாசந்தீர்க்கிருதம்.

ஆதளையின்பழச்சாறுஞ் சுத்தாவி னெய்பால்-நீதவிருசீரகந்திரிகடுகு-மாதேகேள், காகவென்றேயெழும்புக் காச்சுவாசம்விலே பாய வென்றேபேகும்பார். (௩௩)

### விக்கந்திர உள்ளுக்கு மேலுக்குமருந்து.

காசம்வெட்சாரக்கனத்தயிர்து மென்பொடியாய், சாவுள்ளியிஞ்சி
ச்சாறிதனிலிடில்-பாரமுள்ள, விக்கம்வற்றித்தூக்கமுண்டாமேலும் பூ
சிகழ்ந்து,வாய்சகவேசாய்க்குமலம். (௫௨)

### மலசலக்கட்டு விம்மிவீங்கெபகரப்பன்றீர.

மலநீரடைத்துவிம்மிவயுகரப்பன்வீங்கில், பெலமாமரிதகிரை ம
ட்டிட்டு-குலஆவின்கோமியத்திற்கூட்டிக்குலவியருந்திடவே, சயப்பி
றிற்போந்தின்னைந்தான், (௫௩)

### மலக்கட்டால்விகங்கியதுதீரஎண்ணெய்.

தின்னுஞ்சிறுகுட்டைதேங்காய்ச்சங்குள்ளி, தண்ணகனித்தனி
யேசாறுமுகாய்- பெண்ணேகேள், ஆமணக்கெண்ணெயோணியன்போ
லொய்ச்சியுண்ண சாமமதில்விக்கமலஞ்சாய்க்கும்; (௫௪)

### கிரந்தி-புண்-சூலை-வயிற்றுவலி-வாதகுஷ்டந்தீர:

### பட்டைச்சூரணம்.

சாய்க்கும்படிகேளாய் தான்கிரந்திபுண்சூலை, வாய்க்கும் வயிற்று
வலிவாதகுஷ்டம்-நீக்கமருந், துண்ணுவுலகததிலுய்யாமல் மானிடர்க்
குப், பண்ணுபட்டைச்சூரணமும்பார்த்து. ௫௫

பார்த்துநடைமருந்துபஞ்சலவணம் விளங்கஞ் சார்த்துநருஞ்சீர
கமுந்தானேடெர்த்தபடி இட்டுபட்டைச்சூரணமுமிரண்டுபங்கிற் கலந்
து-தட்டிக்கொடுதின்னத்தான். ௫௬

தின்னுதேன்நெய்மருந்துசேர்ந்தபடிமுக்கழஞ்சு-பன்னுதான்கா
லைதனிற்பாக்குடனே அன்னங்கேள்-பத்தியந்தான செங்கீரைத்தண்டு
பலாதுவரை-உத்தியநெத்திலிசுறாவுண். ௫௭

### மலக்கட்டு வெப்புவாயுதீர சிவதைவேர்ச்சூரணம்,

உண்ண இலவங்கம்ஓதுபலமுக்கடுகு- திண்ணேலம்நாகப்பூசேர்
ந்முத்தம்-பண்ணுபொடி-பாலுடனேநற்சிவதைபாலுடனேசுத்திபொ
டி; நாலுடனேமூன்பொடிசேரநன்று. ௫௮

நன்றுபொடிமுக்கழஞ்சு நாலுக்கேதன்சர்க்கரையில்-தின்றுவிடும்
போதேசிதறிவிடும்-என்றுந்தான்-மீளாமலக்கட்டுமிகுந்தவெப்புவாயு
கிளாகநோக்குங்கிரந்தி. ௫௯

### கிரந்திகட்டுச்சூலைதீர.

கிரந்திகட்டுச்சூலைதனக்கேர்க்கநவாச்சாரம்- பொருந்துமிந்தியோ
ற்றூரக்கும்போது மருந்துபச்சை நாவிபடப்பம்விரைநற்கோஷ்டம்
வளமிவை- மேவுநிம் -ச்சாற்றிவிடமீளும். ௬௰

### வாதந்தீரச்சூரணம்.

மீளுமிலைக்கள்ளிவேர்பட்டையையுலர்த்தி-தூளாகவேயிடித்துத்
தப்பபொடி-கேளிரண்டு, காசத்தனைபெடுத்துகாலையிற்றேனிலுண்ண
தேகத்தில்வாதம்போந்தோறு ௬௧

## மகோதரந்திரச்சாறு.

தேரம்பேய்ப்பீர்க்கின்காய்பிழிந்துப்பிழிந்த சாறுபசிவுடனேதானுழக்கில்-கூறுகின்ற நற்பெறுங்காயங்கடுகுசுக்கழஞ்சிகொன்றுன்றன்-சொற்பெருமகோதரம்போஞ்சொல். கக

## கிராணிதீர்க்கருங்கோழியெண்ணெய்.

சொல்லுங்கருங்கோழிக்கோல்போக்கி யுட்சதையில்-கில்லாமமுக்கடுகுசேர்காயம-நல்லாய்கேள், பஞ்சலவணத்தயிரிற் பண்ணுமெண்ணெயதான்குடிக்க-அஞ்சுமரிசக்கிராணியாறும். கஉ

## கிராணிதீர உடும்பெண்ணெய்.

ஆறுமுடும்புசதையன்பானமுக்கடுகு கூறுங்கொடுவேலிகூர்வசம்பும் விறுடைய சீரகமுமுள்ளியொடுசேர்த்தரைத்துமொருமெண்ணெய்கூரணமாங்கிராணிகுணமாம். கஙு

## வாயுக்கிராணிதீரநத்தைச்சதையெண்ணெய்,

குணமா நத்தைச்சதையுங்கூறுமுக் கடுகோயம்-கணமானதிரிபலைசார்சீரகமும்-மணமாகுங்காயங்கடுகெட்டு காகாண்மெய்யிற்காய்ச்சில் வாயுகிராணிபோகும்வண்ணம். கசு

## கிராணிதீர எண்ணெய்,

வண்ணக்காயங்கடுகு வாலுளுவைநாற்கலமும்-திண்ணர்தயிர்நீரிற் செய்குடிநீர்-கண்ணியதிற் சுக்குடனேமூன்றுபலந் தோற்புங்குஞ்சாரமடையுந்-தக்கவட்டத்திருபதிவேர்தாம். கரு

வேருங்கிராம்புமெவன்சாதி பத்திரியும்-சேர்மோதகக்கசோலந் திரிபலையுஞ் சாருங்கருவேப்பிலைகடுக்காய்காணும்ளவசூரமெண்ணெய்அருநெய்யிற்கிராணியகலும். கஎ

## வாயுக்கிராணிதீர எண்ணெய்:

அகலுறுணுச்சாற்றிலான் தயிர்நீர்சரிபாய்-புகலுமுக் கடுகிந்துப்போடுவிடையம-இகலும்,வடிவுடையசாதிக்காய்வருமெண்ணெய்கொள்ளப்-பொடிபடும்வாயுகிராணிபோற்று. கஅ

## கிராணிதீர எண்ணெய்.

போற்றும்பிரண்டைசுக்கும்பொடிமிளகுதிப்பிலியும்-ஏற்றும் எவக்ஷாரம்இந்துசீரகமும் விற்றிருக்க, விடையந்தயிரெண்ணெய்வேகவைத்துக்கொள்ளப்பொடியாங்கிராணிவிட்டுப்போம் ருகூ

## வாதகுன்மந்தீரப்பேய்த்தும்மட்டிக்காய் எண்ணெய்:

விடுபேய்த்தும்மட்டிக்காய்வேகவைத்துமுப்பலையும்-இடுவாய்திரிகடுகும்இந்துப்-பொடிகூட; சிற்றாமணக்கெண்ணெய் சேர்த்தாதிடில் வாய்வுகுன்மம்-பெற்றார்மலஞ்சுழியுமசீக்க எம்